உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

துன்முகி – புரட்டாசி – 2016 – செப்டம்பர் இதழ் – 51

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்




| | |
|---|---|
| தனி இதழ் | ரூ 10.00 |
| ஆண்டுச் சந்தா | ரூ 100.00 |

உ
சிவமயம்

# இறை வணக்கம்




சேவேந்து கொடியானைச் சேர்ந்தாள் தன்னைச்
செங்கமலப் போதொத்த செல்வி யாளை
சிறுவண்டு தென்பாடித் திரியப் பூக்கள்
செங்குமுதம் கமலமொடு சேர்ந்து நிற்கப்
பாவேந்து தமிழ்ப்புலவோர் பாடல் மாந்தும்
பச்சைமயில் பரமேட்டி பவள வாயாள்
பனிபடர்ந்த மலையிருப்பாள் குயில்கள் பாடிப்
பறந்துதிரி வன்னிவனம் பாது காக்கும்
பூவேந்து குழல்மாது புருவ வில்லாள்
புன்னகையாள் தவளநிறப் பொருப்பின் மேலாள்
புரிகுழலாள் வரிவிழியாள் பூத நாதன்
போற்றுதிரு மனையாட்டி கழனி வாசல்
காவேந்து வன்னிவனம் காக்கும் நெல்லை
கால்வணங்கி மாலகற்றி மங்கை முன்னர்க்
கைகுவித்தார் தம்வாழ்வு கனிய வைப்பாள்
கண்ணுதலான் தன்துணையைக் கருத லாமே.

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

### (காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

சிவத்திருப்பதிகள் அனைத்திற்கும் தலைமையிடமாக விளங்குவது திருக்கைலாயம். இதனை வெள்ளி வெற்பென்றும் விளம்புவர். வெண் பனி படர்ந்த மலை. ஆதலால் வெள்ளி மலை எனப்பெற்றது. பட்டினத்தார் இதன் அருமை பெருமைகளைப் பாடித் தன்மனக்குறைகளை வெளியிடுகிறார். தல வைப்பு முறையில் பாடாது தோன்றியவாறு பாட முற்படுகிறார்.

காடுகள் பரவிக் கிடக்கின்ற வெள்ளி மலைக்கரசே! உன்னுடைய கழல் பொருந்திய திருவடிகளை நம்பி வந்தேன். ஊன் நிறைந்த உடலோடு பிறக்கின்ற இம்மானிடப் பிறப்பை நீக்குவாய். கருவூர்த் தேவருக்காக அவர் வேண்டு கோட்கிணங்கிக் கையிலேயுள்ள மான்சாயச் சிவந்தகையிலுள்ள மழு என்ற ஆயுதம் சாய, கொன்றை தென்புறம் சாயத் தன்னுடைய திருமேனியைச் சாய்த்த சிவக்கொழுந்தே! என் பிறப்பொழிய உன்னை நம்பியுள்ள எனக்கு உதவுக !

*கான்சாயும் வெள்ளி மலைக்கரசே! கழல் நம்பினேன்*
*ஊன்சாயும் சென்மம் ஒழித்திடுவாய்! கருவூரனுக்காய்*
*மான்சாயச் செங்கை மழுவலம்சாய வனைந்தகொன்றை*
*தென்சாய நல்ல திருமேனி சாய்த்த சிவக்கொழுந்தே!*

எதனையும் விரும்பாது வீட்டைத் துறந்து பசி வந்த காலத்தில் அங்கங்கே இரந்துண்டு எவ்வித உணவும் உண்ணாமையால் கறையற்ற பல்லுடன் வெண்மையான வாயுடன் ஒரு பொருளிலும் பற்று இன்றிச் சொல்லும் பொருளும் இன்றிச் சுகானந்தமான துயிலிலே இரவும் பகலும் தன்னை மறந்த நிலையில் நான் இருப்பது என்றோ? கூறுக கயிலாயத்துக் கடவுளே!

*இல்லம்து றந்துபசி வந்தபோது அங்கு இரந்துநின்று*
*பல்லும் கறையற்று வெள்வாயு மாய் ஒன்றில் பற்றுமின்றிச்*
*சொல்லும் பொருளும் இழந்துசு கானந்தத் துரக்கத்திலே*
*அல்லும் பகலும் இருப்ப (து) என்றோ? கயிலாயத்தனே!*

தலைவனே! கயிலாயத்தில் உறைபவனே! நான் எவ்விதச் சிந்தனையும் இன்றி ஆசைகளை அறுத்து எவ்வகையான செயலுமற்று நினைவையும் துறந்து நினையாமையும் நீங்கி சிந்தனை அற்றவனாய்த் தன்னந் தனியே இருந்து ஆனந்தத் துயில் நீங்காத நிலையில் என்றைக்கு நான் இருப்பேன்? என்று எவ்விதச் செயலுமின்றிச் சும்மா இருக்கின்ற திறத்தை வேண்டுகிறார். அருணகிரியார் கூடத் தான் திருவருணைக் கோபுரத்தின் உச்சியிலிருந்து வீழ்ந்தபோது காப்பாற்றிய முருகனை நோக்கி நான் என்ன செய்ய என்று கேட்கின்ற போது முருகப் பெருமான் சும்மா இரு என்று சொன்னார். அருண கிரியாரும் தம்முடைய கந்தரனுபூதியில்

*செம்மான் மகளைத் திருடும் திருடன்*
*பெம்மான் முருகன் பிறவான் இறவான்*
*சும்மா இருசொல் அறஎன் றலுமே*
*அம்மா பொருளொன்றும் அறிந்திலனே*

என்று பாடுகிறார். சும்மா இருக்கும் திறமறியேன் என்பார் தாயுமானார். நம் பட்டினத்தாரும் அதனைப் பின்பற்றிச்

*சிந்தனை அற்றுப் பிரியமும்தான் அற்றுச் செய்கையும் அற்று*
*நினைந்ததும் அற்று நினையா மையும் அற்று நிர்சித்தனாய்த்*
*தனந்தனி யேஇருந்து ஆனந்த நித்திரை தங்குகின்ற*
*அனந்தனில் என்றிருப்பேன் அத்தனேகயி லாயத்தானே!*

என்று பாடுகிறார். கயிலாய சனே! கையைக் கலமாகக் கொண்டு பிச்சை எடுத்து அதனைப் புசித்துக் கிழிந்த துணியைத் தையாமல் உடுத்தித் தினந்தோறும் உன் சந்நதிக்கே வந்து உடல் தரைபட உனை வணங்கி உடல் உரோமங்கள் மயிர்க்கூச்செறிய உன் நாமங்களைக் குறிக்கும் சொற்களைச் கூறி நான் ஓலமிடுவது எக்காலம்?

கயிலாயத்து இறைவனே! திருநீறு பொருந்திய மேனியில் உள்ள உரோமங்கள் சிலிர்க்க உள்ளமானது சேறுபோல் கசிந்து கசிந்து உருகிட உன்னுடைய சிறப்பான பாதங்களையே மாறாத தியானத்தால் நினைத்து ஆனந்தம் மிகுதியாகி அதனால் பொழிகின்ற கண்ணீர்

மார்பில் ஆறு போல் பெருகி ஓடக் கிடக்கும் நாள் என்று வருமோ? இதன் மூலம் இறைத்தியானமே பெரிதென என்னுவதைக் கீழ்க்காணும் வண்ணம் பாடுகிறார்.

*நீறார்ந்த மேனிஉட ரோமம் சிலிர்த்துஉளம் நெக்குச்*
*சேறாய்க் கசிந்து கசிந்தே உருகிட நின்சீரடிக்கே*
*மாறாத் தியானமுற்று ஆனந்தமேற் கொண்டு மார்பில் கண்ணீர்*
*ஆறாய்ப் பெருகக் கிடப்பதென்றோ கயிலாயத்தனே!*

தலைவனே! கயிலை நாதனே! செல்வம் படைத்தோரின் பின்னே சென்று தம்முடைய துன்பத்தைப் பற்றிப் பேசித் தினந்தோறும் பல்லைக் காட்டிப் பரிதவிக்காமல் பேரானந்தத்தின் எல்லையில் புகத்தனியாக எனக்கு ஓர் இடத்தைக் காட்டினால் துன்பம் துன்பம் இன்றி இருப்பேன் என்கிறார் பட்டினத்தார். இனிது இனிது ஏகாந்தம் இனிது என்றனர் பெரியோர்.

*செல்வரைப் பின்சென்று சங்கடம் பேசித் தினந்தினமும்*
*பல்லினைக் காட்டிப் பரிதவியாமல் பரமானந்தத்தின்*
*எல்லையில் புக்கிட ஏகாந்தமாம் எனக்காம் இடத்தே*
*அல்லல் அற்று என்றிருப்பேன் அத்தனே கயிலாயத்தனே!*

குரங்கின் குட்டி போல நான் உள்ளேன். நாய் அனைய இந்த அடியவனின் வழக்கத்தை அறிந்தும் மீண்டும் பலவற்றை எண்ணும் மனத்தை என்ன செய்வேன்? என் தீமைகளைப் போக்கிக் குட்டியை ஏந்திய பூனைபோல் இருக்கின்ற நான் எந்தையே உனக்கே உரியவன் ஆவேன் என்பதன் மூலம் நான் என்செய்யினும் உன் பிள்ளை என்னைக் கை விடாதே என்கிறார்.

*மந்திக் குருளை ஒத்தேன் இல்லை நாயேன் வழக்கறிந்தும்*
*சிந்திக்கும் சிந்தையை யான்என் செய்வேன் எனைத்தீதகற்றிப்*
*புந்திப் பிரிவில் குருளையை ஏந்திய பூசையைப்போல்*
*எந்தைக்கு உரியவன்காண் அத்தனே கயிலாயத்தனே!*

கயிலாயத்தில் உறைகின்ற கடவுளே ! நான் எதற்கும் வருந்தேன். பிறந்தும் இறந்தும் என் ஐம்புலன்களும் காட்டுகின்ற வழிச் சென்று

பொருந்த மாட்டேன்.நரகத்திலும் புக மாட்டேன். புகழ்வார் தம்மிடத்தில் இருந்தேன்.இனிமையான அக்கூட்டத்தினரை விட்டு நான் பிரியேன். அஞ்செழுத்தாகிய உன் அருளால் அருந்துவேன்.அதாவது தீ வழிச் செல்லேன்.நல்லோர் கூட்டுறவை விடமாட்டேன். நமச்சிவாய என்னும் உன்னுடைய அஞ்செழுத்தைத் தினமும் ஓதுவதை ஒழியேன் என்பது அதன் உட்பொருள்.

***வருந்தேன் பிறந்தும் இறந்தும் மயக்கும் புலன்வழிப்போகிப்<br>பொருந்தேன் நரகில் புகுந்திலேன் புகழ்வார் இடத்தில்<br>இருந்தேன் இனியஅக் கூட்டம் விடேன் இயல் அஞ்செழுத்தா<br>அரும்தேன் அருந்துவன்நின் அருளால் கயிலாயத்தானே!***

***மதுரை***

அடுத்துவரும் பாடல் மதுரை பற்றியது. மதுரையைச் சிவராசதானி என்பர். ஆலவாய்ப் பெருமான் 64 திருவிளையாடல்களை நிகழ்த்திக் காட்டிய இடம்.அன்னை உமையவள் மலையத்துவச பாண்டியன் மகளாக வேள்வித் தீயிடைத் தோன்றி அங்கயற்கண்ணி என்ற பெயருடன் மதுரையை ஆண்டு அரசியாகி இமயம்வரை வெற்றியுலா வந்து இறைவனை மணந்து கொண்ட பெருமையுடையது.

"என்றினி மதுரை காண்பேன் எப்பகல் சௌந்த ரேசன் தன்திரு வடியைக் காண்பேன்" என்று ஒரு புலவர் மனமுருகிப் பாடியுள்ளார். மதுரைச் சொக்கநாதா! சவுந்தர பாண்டியனே! இப்பூவுலக வாழ்க்கையினை விட இயலுமா? அதை விடுவதில் என் மனம் உறுதியுடன் நிற்குமா? உன்அருளைத் தேடி அலைய வேண்டுமோ? அற்பர்களின் வீட்டு வாயிலில் நின்று கண்ணீர் ததும்பி இரந்து நிற்க வேண்டுமோ? இந்த நிலைகளைத் தவிர்த்தருள்க! என்று வேண்டுகிறார்.

***விடப்படுமா இப்பிரபஞ்ச வாழ்க்கையை? விட்டுமனம்<br>திடப்படுமோ? நின் அருளின் நீயே தினமே அலையக்<br>கடப்படுமோ? அற்பர் வாயிலில் சென்று கண்ணீர்ததும்பிப்<br>படப்படுமோ சொக்கநாதா! சவுந்தர பாண்டியனே!***

*(தொடரும்....)*

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

## தடாதகைப் பிராட்டியார் அவதாரம்

மனுதர்ம சாஸ்திரத்தில் விதித்துள்ளபடி அறநெறி தவறாமல் செங்கோல் செலுத்தி வந்தான் மலயத்துவச பாண்டியன். உயிரிலும் பெரிதாகப் போற்றப்படும் ஒழுக்கத்திலே சிறந்தவன். வெற்றியை ஆபரணமாகப் பூண்டவன். கருணைக் கடல் எனத் திகழ்ந்தவன். இனிய சுபாவம் உடையவன். கட்டழகு மிகுந்தவன். வடமொழிக் கலைகளிலும் மிகுந்த தேர்ச்சியும் புலமையும் பெற்றவன். சூரிய குலத்தவனாகிய சூரசேன சோழனது மகள் காஞ்சனமாலையை மணம் செய்து கொண்டான். சோமசுந்தரப் பெருமானை முக்காலும் நியமத்தோடு வழிபாடு செய்பவன். பல சிறப்புக்களைப் பெற்றிருந்தும், மலயத்துவசனுக்கு ஒரே ஒரு பெருங்குறை இருந்தது. மகன் இல்லாக் குறைதான் அது. மகப்பேறு இல்லாமல் வருந்திய மன்னன் அசுவமேதயாகம் செய்ய ஆரம்பித்தான். வேத விதிப்படி தொண்ணூற்று ஒன்பது யாகங்களைச் செய்து முடித்து விட்டான். நூறும் செய்து முடிப்பானாயின் தேவேந்திரப் பதவி அவனுக்குக் கிட்டிவிடும் என்பதை உணர்ந்துகொண்ட தேவேந்திரன் மலயத்துவசன் முன்பு தோன்றி நீ வேண்டுவது மகளைப் பெறுவது தானே யாகையால் புத்திரகாமேஷ்டி யாகம் செய்வாயாக என்று கூறிவிட்டுத் தன் பொன்னுலகம் சென்றான். பின்பு மலையத்துவசன் தன் மனைவி காஞ்சனமாலையுடன் சேர்ந்து நியம நிஷ்டை தவறாது புத்திர காமேஷ்டி யாகம் செய்ய ஆரம்பித்தான். வேத நீதிப் படி மதுரைத் திருக்கோவிலுக்குக் கிழக்கே சிறந்த வேள்விச்சாலை அமைத்து யாகம் செய்யலானான். யாகம் மிகவும் சிரத்தையுடனும் நடந்து வந்தது.

யாகத்தில் இறுதி நாளான மங்கள தினத்திலே பாண்டியன் வலத்தோள் துடிக்க, ஏழுலகங்களும் மகிழ்ச்சி எய்த, சைவம், பாசுபதம், மாவிரதம், காளாமுகம், பைரவம், வாமம் என்னும் அகச்சமயங்கள் ஆறும் தழைத்தோங்க, வேதங்களும் தேவதுந்திபிகளும் கோஷம் செய்ய, தருமம் மகிழ பதினெட்டு மொழிகளுள்ள பூமியிலே தமிழ் மொழி பயில்கின்ற நாடு சிறப்புற, மூவேந்தருள் பாண்டியரே பெரும் சிறப்பு எய்த, அக்னி தேவனே தான் செய்த தவம் பயன்பெற, யாக குண்டத்திலிருந்து உயிர்கள் அனைத்தையும் உலகங்கள் யாவையும்

பெற்றவளாகிய உமா தேவியார் மூன்று தனங்களுடைய ஒரு பெண் குழந்தையாக மூன்று வயதுடன் எழுந்து வந்து நின்றாள். பெண்குழந்தையின் கொண்டையினின்று முத்துமாலை சுற்றப்பட்டுத் தொங்க விளங்கியது. பவளமாலை ஒளி வீசியது. இடையினைச் சுற்றியிருந்த மெல்லிய ஆடையின் மேல் மணிமேகலை ஒலிக்க, காதுகளிலிருந்து தொங்கும் மாணிக்கக் காதணிகள் துலங்க விளங்கினாள் திருக்குழந்தை. தளிர்த்திருவடிகளில் விளங்கிய சிலம்பும் சதங்கையும் கலந்து ஒலி செய்தன. மழலைச் சொற்களும் புன்னகையும் தோன்றும் திருவாயுடன் தளிர் நடையுடன் பூங்கொடி போன்று அசைந்துவந்து காஞ்சனமாலா தேவியின் மடியிலே, அறநெறி நின்றோர்க்கு இம்மை மறுமை இன்பங்களையும் வீடு பேற்றினையும் அருளும் உமையம்மை அமர்ந்திருந்தாள். காஞ்சனமாலை தான் அடைந்த பெண்குழந்தையை வாரியெடுத்து மார்போடு சேர்த்து உச்சிமோந்து முத்த மிட்டு இன்பக் கடலாடினாள். ஐந்தொழில்கள் புரிவதற்கும் அதிதேவதையான பராசக்தி, வாக்குமனம் வேதங்கள் கடந்து நின்ற உமாதேவியாரே தனது திருமகளாக வந்து தோன்றுவதற்கு மலயத்துவச பாண்டியன் செய்த பெருந்தவம்தான் என்ன?

அன்பு மிகுதியால் உமாதேவியார் தனது குழந்தையாக வந்து அவதரித்த தன்மையையும், தன்மனைவி காஞ்சன மாலையின் தவப்பயனையும் முறையாகத் தெளிந்து கொள்ளாத மலையத்துவசன் உள்ளத்தே துன்பம் கொண்டான். நான் ஒரு மகனை வேண்டினேன். அரும் தவம் புரிந்தேன். புத்திராகாமேஷ்டியாகம் செய்தேன். ஆனால் நான் அடைந்தது பெண் குழந்தையையே என்செய்வேன் இந்தப் பெண் குழந்தையும் மூன்று தனங்களுடன் பிறந்துள்ளதே எனது பகைவர் எள்ளி நகையாடுவார்களே அந்தோ ! என வருந்திக் கொண்டிருந்தான்.

அது சமயம் சிவபெருமானின் அருளால் ஆகாசவாணியானது, வேந்தே ! கலங்காதே, மகனுக்குச் செய்வது போல எல்லாவகையான விசேஷங்களையும் உன் திருமகளுக்குச் செய்வாயாக. வேதநெறி வழுவா மல் எல்லாம் செய்து தடாதகை என்று நாமம் சூட்டிப் பின்னர் மகுடம் புனைவிப்பாயாக. ஏற்ற கணவன் வரும் காலத்தில் மூன்றாவதொரு தனம் தானே மறைந்துவிடும் என்று எழுந்தது.

இன்பமான விண் ணொளி கேட்ட மலயத்துவசன் அமைதியும் அன்பும் உவகையும் மிகக் கொண்டான். ஆனந்தக் கண்ணீர் பெருகி ஓடச் சோமசுந்தரப் பெருமானை வாழ்த்தித்துதித்தான். மங்கல வாத்தியங்கள் பல கோஷிக்க யாகசாலையிலிருந்து கிளம்பி அரண்மனையை அடைந்தான். மறையவருக்கும் பிறருக்கும் ஏராளமான பொன்னை வாரி வழங்கினான். பூசைகளும் திருவிழாக்களும் செய்வித்தான்.

சிறையிருந்தோர் விடுதலை பெற்றனர். பகையரசர் தமது பழய கௌரவம் திரும்பப் பெற்றுத் தத்தம் நாடு திரும்பினர். புலவர்கள் பொன்னும், மணியும், புத்தாடைகளும் இன்னும் பல சிறப்பும் பொருள்களும் பரிசாகப் பெற்றனர். மதுரை மாநகரும் பாண்டிப் பெருநாடும் பெருமகிழ்ச்சி கொண்டாடின.

மலயத்துவசன் மகிழ்பூத்து விண்ணொளி அருளிய வண்ணமே தன் மகளுக்கு வேத விதிப்படி சாதகன்மம் முதலியவற்றைச் செய்து, தடாதகை என்று பெயர் சூட்டி உவந்தான். காஞ்சனையும் மலையனும் திருக் குழந்தையை மிகவும் செல்லமாக வளர்த்தனர். பிராயத்துக்குத் தகுந்த ஆட்டங்கள் காட்டி தாய்க்கும் தந்தைக்கும் தோழியருக்கும் எல்லையற்ற மகிழ்வைத் தந்து நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தோங்கி வந்தாள் தடாதகைப் பிராட்டியார். நான்கு வேதங்கள், ஆறு சாஸ்திரங்கள், பதினெண் புராணங்கள், அறுபத்துநான்கு கலைகள் எல்லாவற்றையும் முற்றவும் குற்றமின் றிக் கற்றுணர்ந்தார். யானை, குதிரை, தேக முதலியவற்றைச் செலுத்தும் திறமையும் நன்கு பெற்றார். வில், வாள், வேல் ஆகிய சாஸ்திரப் பிரயோகங்களிலும் மிகுந்த வல்லமை பெற்றார்.

எல்லாக் கலைகளிலும் நன்கு தேர்ச்சி பெற்றுப் பெருந் தகுதியோடு விளங்கிடும் தன் திருக்குமாரியைக் கண்டு உளம் பூரித்தான் பாண்டியன். தடாதகைப் பிராட்டியாருக்குத் திருமுடி சூட்டவேண்டும் என்று கருதினான். சுமதி என்னும் மந்திரி பட்டாபிஷேக நன்னாளைத் தேர்ந்தான். பல நாடுகளுக்கும் ஓலை போக்கி முடி மன்னர்களை வரச்செய்தான். மதுரை மாநகரம் திருநகரமாகக் காட்சியளித்து. கங்கை முதலான ஒன்பது புனித ஆறுகளின் நீர் தங்கிய பொற்குடங்களையும், சிங்காதனத்தையும் வேதியர் பூசித்து வழிபாடு செய்தனர். தேவர்களை

மகிழ்விக்கயாகங்கள் பல செய்யப்பட்டன. பின்னர் பாண்டியப் பரம்பரைக்கு நெடுங்காலமாக உரியதான மணித்திரு மகுடத்தை யானையின் மேல் வைத்து ஊர்வலம் செய்வித்துப் பூசித்தனர். அதற்குப் பின்பு மாணிக்கக் கடிகையுடைய மேலே கவித்த, சிங்காதனத்தின் மீது தடாதகைப் பிராட்டியாரை எழுந்தருளச் செய்தனர். வேதநாதம் முழங்க, மங்கல வாத்தியங்கள் இயம்ப புண்ணிய தீர்த்தங்களினால் அறவேள் அபிஷேகம் செய்வித்தனர். தனது திருக்குமாரிக்குப் பாண்டியன் மணிமுடி சூட்டித் தன் தலைமையை அளித்தான். பின்னர் வெள்ளை யானை மேலே ஆரோகணித்துத் தடாதகைப் பிராட்டியாரை நகர்வலம் செய்வித்தான். நகர் வலக் காட்சியைக் கண்ட பாண்டியன் ஆகாசவாணி கேட்ட போது கொண்ட உவகையினும் பன்மடங்கு பேருவகை கொண்டான்.

சில நாட்கள் கழிந்தபின் மலயத்துவசன் விண்ணுலகம் சேர்ந்தான். அதன் பின்னர் உலகெலாம் ஒரே குடைக்கீழ் மனுநீதி தவறாது. சிறப்புடன் அரசு புரியலானார் தடாதகை அரசியார். பெண்ணரசி தடாதகைப் பிராட்டியார் திருவாட்சியிலே தருமம், நியாயம், நீதி, புண்ணியம் எல்லாம் தழைத்தோங்கின. பிராட்டியாரது கொலுமண்டம் திருமால் விலாசமாகவும் ஒருங்கே திகழ்ந்தது. செந்தமிழ்ப் புலவர், வடமொழி வாணர், வேதியர். கலைஞர், சமயப்பெரியோர், மெய்ஞ்ஞானிகள், நல்லமைச்சர் எல்லாரும் சபையின் கண் விளங்கிச் சிறந்தனர். தேவலாயங்களும் அறச்சாலைகளும் பல்கிப் பெருகின. சிறந்து ஓங்கின. அறங்களையும் ஈந்தார் பிராட்டியார். கல்வியையும் செல்வத்தையும் இரு கண்களென மதித்து அவற்றைத் தழைக்கும்படி அருளினார். சிவசக்தியே மலையத்துவசன் மகளாகி இப்புவியை மனுநீதி தவறாது ஆண்டார் எனில் அதனை எடுத்துக்கூற வல்லவர் யார்?

கன்னிப்பிராயத்திலே முடி புனைந்து தடாதகைப் பிராட்டியார் தனது அரசியல் நடத்தியதால் பாண்டிய நாடு கன்னிநாடு என்ற பெயர் பெற்றதாயிற்று.

*(ஆதாரம் : புலவர் மணி எழுதிய திருவிளையாடற்புராணம் வசனம்)*

*(தொடரும்...)*

## பட்டினத்தார் பைந்தமிழ்

(தமிழாகரர் தெ. முருகசாமி, முன்னாள் முதல்வர்,
இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி, புதுச்சேரி - 9)

நாடு போற்றும் நற்றமிழ் நகரத்தார் மரபில் தோன்றியவர் பட்டினத்தார். இவர்தம் தெய்வீகச் சிறப்பால் அடிகள் என்ற சிறப்புப் பெயருடன் பட்டினத்தடிகள் எனப் பலராலும்அழைக்கப் படுபவராவார். இவர்தம் வரலாறு பலரால் எழுதப்பட்டுள்ளது. இருப்பினும் இவர், ஒருவரா? பலரா? என்ற ஆய்வில் அறிஞர்தம் முடிவாக அறியப்படுவது கால வரிசையின்படியும் பாடற் பொருண்மையின் படியும் மூவராக, மூத்த அறிஞர் மு. அருணாசலம் பிள்ளை வரையறுத்த கருத்தை ஒருவாறு ஏற்றுக் கொண்டு இலக்கிய உலகமும் பத்தி உலகமும் பட்டினத்ததாரைப் போற்றுகின்றன.

முதலாமவர் திருமுறைபாடிய பட்டினத்தார். இவர் பதினோராம் திருமுறையில் ஐந்து பனுவல்களைப் பாடியவர், இவரது காலம் கி.பி. 10ஆம் நூற்றாண்டு.

இரண்டாமவர் சித்தர் பட்டினத்தார். இவரின் தனிப் பாடல்களும் திருத்தலப் பாடல்களும் உடற்கூற்று வண்ணமாய்ப் பாடியவைகளும் இவரைச் சித்தமரபுத் தொடர்புடையவராகக் கருதுவர். இவரது காலம் கி.பி. 14ஆம் நூற்றாண்டு.

மூன்றாமவர் பிற்காலப் பட்டினத்தார். இவர்தம் ஞானப்புலம் பல், முறையீடு, இரங்கல் என்ற வகையில் பாடிய பாடல்கள் உலகியல் சார்ந்தவைகளாக உள்ளன. இவர் 17ஆம் நூற்றாண்டினர்.

இங்ஙனம் காலத்தால், பாடல்களால் மூவரும் வேறுபட்டாலும் இம் மூவர்க்குமான வரலாற்றுக் கதைப் போக்கு ஒரே வகையானதாகவே பலரால் ஒருமித்துக் கூறப்பட்டுள்ளது. சிந்தனைக் குரியதாய் முனைவர் வெ.சு. அழகப்பனார் தம் பதினோராம் திரு முறை ஆய் வேட்டில் கூறுகிறார். கதையில் சிறு சிறு மாற்றமிருப்பினும் பெரும்பாலும் ஒத்துள்ளதாக இருப்பதற்குப் பட்டினத்தார் மீதுள்ள பக்தியும் அவர்தம் கடுந்துறவும் எல்லோரையும் ஈர்த்ததாக உள்ளதைக் கூறலாம். எது எவ்வாறாயினும் பட்டினத்தார் -

திருமுறை வாணராய் வணங்கத்தக்கவர் என்ற அளவில் பட்டினத்தார் பைந்தமிழ் என்ற தொடரில் அவரையும் அவர்தம் தமிழையும் தொடர்ந்து சிந்திப் போமாக! அனைவர்க்கும் தெரிந்த பட்டினத்தார் கதைச் சுருக்கத்தை முதலில் அறிவோம்!

சங்க காலச் சிறப்புடைய தமிழகக் கடற்கரை நகரங்களுள் காவிரிப் பூம்பட்டினம் ஒன்றாகும், இது பற்றிப் பட்டினப் பாலை என்ற பெயருடைய பத்துப் பாட்டின் நூல் ஒன்றே சான்றாக உள்ளது. மேலும் சிலப் பதிகாரத்திலும் பரக்கப்பேசப் பட்டுள்ளது. எல்லா நலனும் வளனும் கொண்ட காவிரிப் பூம்பட்டினம் பக்திப் பரவச ஆன்மீகச் சிறப்பும் கொண்டதாகும்.

இந்நகரில் வாழ்ந்த தனவணிகர் குலத்தைக் குபேர சம்பத்துடைய குலமாகப் போற்றுவதுண்டு. அவர்களே பின்னாளில் நாடு போற்றும் நகரத்தாராகப் பேரும் புகழும் கொண்டனர். நகரத்தாரின் குபேர வாழ்விற்கு ஒரு கதை உண்டு என முனைவர் வெ.சு. அழகப்பனார் கூறுகிறார்.

சிவபெருமானின் தோழனாகிய அழகாபுரியை ஆளும் குபேரன் ஒருமுறை சிவனோடு கொண்ட திருத்தலப் பயணத்தில் கேதாரம், காசி, காளத்தி வணங்கிவிட்டுக் காவிரிப்பூம் பட்டினம் வந்த போது அதன் பொழில் அழகும் பொதும்பர் பொலிவும் கண்டு அந்நகரிலேயே தங்க விரும்பிய தோடு அம் மண்ணின் மைந்தனாய்ப் பிறக்கவும் விழைந்த வினைப் பயனால் சிவனது வரம் பலிக்க வணிகர் குலத்தில் பிறந்தான். சிவபெருமானுக்கான குபேர சங்காத்தம் உள்ளதை அப்பரடிகள் திருப்புத்தூர் தேவாரத்தில் (6 ஆம் திருமுறை) தருமருவு - கொடைத் தடக்கை அளகைக் கோன்தன் சங்காத்தி ஆரூரில் எனக் கூறுவதால் உணரலாம். சோழ நாட்டின் ஆரூரைச் சுட்டியதால் அந்நபர் சார்ந்த சோழப் பேரரசரின் காவிரிப் பூம்பட்டினத்துத் தனவணிகர் குலத்தில் குபேரன் பிறந்தான் என்பது நகரத்தாரின் குபேர வாழ்விற்கான தக்க சான்றாக உள்ளது.

இந்நிலையில் குபேரன் காவிரிப் பூம்பட்டினத்தில் தன வணிகச் செல்வர் சிவநேசருக்கும் ஞானக் கலையம்மையார்க்கும் மகனாகத்

தோன்றினான். பெற்றோர் திருவெண்காடர் எனப் பெயரிட்டனர். ஆயகலை கள் தேர்ந்தார். சிவபூசையும் சிறப்புற இயற்றி வந்தார். தக்க மணப் பருவம் அடைந்தார்; சிவகலை என்பவர் வாழ்வரசியானார். தம்பதியர்க்கு மகப் பேறில்லாத நிலையில் திருவிடைமருதூர் ஈசன் தானே குழந்தையாய்க் கோயிலின் திருச்சுற்று வில்வ மரத்தடியில் கிடக்க அக்குழந்தையைத் திருவெண்காடர் பெற்று வளர்த்து வந்தார். குழந்தை மருதவாணர் பொருளீட்டும் தக்க பருவம் எய்தியதும் கடல் வாணிபம் பொருட்டுப் பல தீவுகளுக்கும் சென்று பொருளீட்டி ஊர் திரும்புகையில் தம்முடன் வரட்டி மூட்டைகளையும் அவல் மூட்டைகளையும் பிறர் எள்ளி நகைக்குமாறு கொண்டுவந்ததை அறிந்த திருவெண்காடர் விரைந்து வரட்டியைச் சோதித்தார்; வைர வைடூரியங்கள் மின்னின.

மகிழ்ந்த தந்தை வெண்காடர், மகன் மருதவாணரைக் காணச் சென்ற போது வெண்காடரின் மனைவி தம் மகன் அளித்ததாகத் தந்த பேழையில் காதற்ற ஓர் ஊசியும், காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே என எழுதிய தத்துவ நறுக்கோலை ஒன்றையும் கண்டு, மகன் தனக்கு உலகம் நிலையாமையை உணர்த்திச் சென்றதாக உணர்ந்து வேண்டின் உண்டாகத் துறக்க (342) என்ற குறளின் படி எல்லாச் செல்வ வாய்ப்புகளும் உள்ள நிலையிலேயே துறவறத்தை மேற் கொண்டார். இது, புத்தர் - தம் அரண்மனைச் செல்வாக்கு, அதிகாரம் முதலியவை இருக்கும் போதே முற்றுந் துறந்ததற்குச் சமமானதாகும். இதனால் திருவெண்காடராம் பட்டினத்தாரைத் தென்னாட்டுப் புத்தர் என்றால் அது முற்றிலும் தகும் எனலாம்.

நாடு, நகர, வீடு, மனை, சுற்றம் எல்லாவற்றையும் துறந்த வெண்காடர் திருத்தலப் பயணம் மேற்கொண்டார். வடக்கே துளுவ நாடு வரை சென்றார். அங்குள்ள உஞ்சைனி மாகாள ஈசனார் கோயிலில் தங்கியிருந்த போது அந்நகர அரசனது அரண்மனையில் நகையைத் திருடியதான பழியால் கழுவேறும் தண்டனைக் குள்ளானார். இறையருளால் கழுமரம் தீக்கிரையானது. இதனால் அடிகளின் தெய்வீக ஆற்றல் எங்கும் பரவியது. மன்னர் பத்திரகிரியார் பட்டினத்தாரின் சீடரானார்.

இந்நிலையில் தென்னாட்டிற்கு வரும்போது உஞ்சைனியின் அரசர் பத்திர கிரியாரோடே பட்டினத்தார் திருவிடை மருதூர் வந்து அங்குள்ள திருக்கோயிலின் மேலை வாயிலில் பத்திர கிரியாரும், கீழைவாயிலில் பட்டினத்தாருமாக வீற்றிருந்தனர். திருவிடை மருதூரின் இறைவன் இருவரையும் சோதிக்கவிரும்பி ஒரு தவசியாகப் பட்டினத்தாரிடம் யாசித்தார். அவரோ மேலைக் கோபுரவாயில் உள்ள குடும்பியிடம் யாசிக்கச் சொல்லியனுப்பினார்.

பத்திர கிரியாரிடம் சென்ற தவசி, குடும்பி எனச் சொன்னதைக் கூற பத்திரகிரியார் தம்முடன் உள்ள நாயைப் பராமரிப் பதைக் கொண்டே திருவெண்காடர் அங்ஙனம் கூறியதைத் தெளிந்து தம்மிடம் உள்ள ஓட்டினை வீசியெறிய அது நாய்த் தலையில் பட்டு நாய் செத்ததோடு திருவோடும் உடைந்தது.

யாசிக்க வந்த தவசியை மருதீசராகவே எண்ணி வெண்காடரும் பத்திரகிரியாரும் வணங்கிப் போற்றினர். திருவோட்டால் இறந்த நாய் வினைப் பயனால் காசியில் ஓர் அரசமகளாய்ப் பிறந்து வளர்ந்து திரு விடை மருதூர் வந்து பத்திரகிரியாரின் திருக்கண்ணோக்கால் முத்தியடைந்தது.

இஃதறிந்த திருவெண்காடர் தமக்கு முத்திகிட்டவில்லையே என ஏங்கி மீண்டும் தலப்பயணம் கொண்டு திருவெண்காடுவந்தார். முன்பு தாம் அங்கு வாழ்ந்த போது தமக்குக் கணக்கராக இருந்த சேந்தனார் பட்டசிறைத் துன்பத்தையறிந்து நீக்கியருளினார். சேந்தனாருடன் சீர்காழி, தில்லைத் தலங்களைத் தரிசித்தார். பின்னர் சேந்தனாரைத் தில்லையில் தங்கச் செய்து விட்டுப் பல்லவ நாட்டிற்குப் பயணமாகித் திருவொற்றியூரில் சென்று தங்கி,சிவலிங்க ஐக்கியமானார்.

இப்படியான வரலாறு பட்டினத்தாருக்கான பொதுமை என்பதை யாவரும் உணர்வர். அவருக்கான வரலாற்றின் நுட்பத்தில் அவர்மேற் கொண்ட துறவுபற்றியே அனைவரும் அவருக்கான அடையாளம் என்பர். அந்த வகையில் துறவு விரிந்த உறவு என்ற உண்மையை அவர் இயற்றிய பாடல்களால் அவர் உலகியலை பக்தியை, தெய்வீகத்தை, துறக் காதவற்றை இனித் தொடர்ந்து உணர்வோமாக!

# திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

## இல்லறஇயல்

இல்வாழ்க்கை - இல்லாளாகிய துணைவியோடு கூடி வாழ்வதன் சிறப்பு

1. **இல்வாழ்வான் என்பான் இயல்புஉடைய மூவர்க்கும்
நல் ஆற்றின் நின்ற துணை.**

இல்வாழ்வான் - இல்லறத்தில் கூடி வாழ்கின்றவன் ; என்பான் - என்று சொல்லப்படுபவன் ; மூவர்க்கும் - துறந்தார், துவ்வாதார், இறந்தார் என்னும் மூவர்க்கும்; நல் ஆற்றின் - நல்வழியில் ; இயல்பு உடைய - அறம் செய்யும் இயல்புடைய ; நிலையான துணையாவான்.

இல்லறத்தில் கூடிவாழ்கிறவன் என்று சொல்லப்படுபவன், இயல்பாகவே துறந்தார் துவ்வாதார் இறந்தார் எனச் சொல்லப்படும் மூவர்க்கும் நல்லறவழியில் அறம் செய்யும் இயல்புடைய நிலையான துணையாக நிற்பவன் ஆவான்.

2. **துறந்தார்க்கும் துவ்வாத வர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை.**

துறந்தார்க்கும் - அனைத்தும் துறந்தவர்களுக்கும், துவ்வாதவர்க்கும் - உண்ண உணவின்றித் தவிப்போர்க்கும் ; இறந்தார்க்கும் - உறவு ஆதரவு ஏதேனும் இன்றித் தனியே இறந்து கிடப்போர்க்கும் ; இல்வாழ்வான் - இல்லறத்தில் வாழ்பவன் ; என்பான் - என்று சொல்லப்படுபவன் ; துணை - துணையாவான்.

அனைத்துப் பற்றையும் துறந்து வருவோர்க்கும் உண்ண உணவின்றித் தவிப்போருக்கும் ஆதரவின்றித் தனியே இறந்து கிடப்போருக்கும் தக்கநிலையில் உதவி செய்வதால் இல்லறத்தில் வாழ்பவன் நல்ல துணையாவான்.

இல்வாழ்க்கை எல்லா நிலையிலும் உதவியானது என்பது இரண்டு பாடல்களால் உணரப்பட்டது. உம்மை - எண்ணும்மை

3. **தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான்என்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை.**

தென்புலத்தார் - தென் திசைக்கண் இருப்பதாகக் கருதப்படும் கடவுளர்கள் (முன்னோர்கள்) ; தெய்வம் - பிற தெய்வங்கள் ; விருந்து - விருந்தினர் ; ஒக்கல் - சுற்றத்தார் ; தான் - இல்லறத்தில் இருப்பவனாகிய தான் ; என்று - எனப்படும் ; ஐம்புலத்து - ஐந்து இடங்களிலேயும் ; ஆறு - அறநெறியினை - ஓம்பல் - போற்றுதல் ; கடைப்பிடித்தல் ; தலை - முதன்மையானது.

தென்திசைக்கண் இருப்பதாகக் கருதப் பெறும் முன்னோர்கள், தெய்வங்கள், விருந்தினர்கள், சுற்றத்தார் முதலாகத் தன்னையும் உட்படுத்திய ஐந்துஇடங்களிலும் அறநெறியினைக் கடைப் பிடித்தல் என்பதே இல்வாழ்வானுக்குரிய முதன்மையான செயலாம்.

ஆங்கு - அசை ; ஓம்பல் - தொழிற்பெயர்.

**4. பழிஅஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை**
**வழிஎஞ்சல் எஞ்ஞான்றும் இல்**

பழி அஞ்சி - அறநெறியைக் கடைப்பிடிக்கா விட்டால் வரும் பழிக்கு அஞ்சி ; பாத்து - பகுத்துக் கொடுத்து ; ஊண் - உண்ணும் ; உடைத்தாயின் - தன்மை இருந்தால் ; வாழ்க்கை - ஒருவனுடைய வாழ்க்கை ; வழிஎஞ்சல் - அவனுடைய வழி எஞ்சி நிற்பது ; எஞ்ஞான்றும் - எவ்வகையிலும் ; இல் - இல்லை.

அறநெறியைக் கடைப் பிடிக்காவிட்டால் வரும் பழிக்கு அஞ்சிப் பிறருக்குப் பகுத்துக் கொடுத்துத் தானும் உண்ணுகின்ற தன்மை ஒருவனுடைய வாழ்க்கையில் இருந்தால் அவனுடைய வழியில் எஞ்சி நிற்பது என்பது எதுவும் எவ்வகையிலும் இல்லை. பகுத்துண்டால் ஒருவனுக்குப் பழி என்பது வாராது என்பது கருத்து.

பழி அஞ்சி - நான்காம் வேற்றுமைத் தொகை.; எஞ்ஞான்றும் - முற்றும்மை; இல் - குறிப்பு வினைமுற்று.

**5. அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது.**

அன்பும் - இல்லற வாழ்க்கையில் உள்ள கணவன், மனைவியிடையே உள்ள அன்பும் ; அறனும் - அதனால் பிறர்க்குச் செய்கின்ற அறனும் ; உடைத்தாயின் - உடையதாக இருந்தால் ;

இல்வாழ்க்கை - இல்லறவாழ்க்கையின் ; பண்பு - பண்பு ஆகும் ; பயனும் - இல்லற வாழ்வு வாழ்ந்ததற்கான பயனும் ; அது - அதுவே ஆகும்.

இல்லற வாழ்க்கையில் உள்ள கணவனும் மனைவியும் ஒருவர்க்கொருவர் கொண்டுள்ள அன்புடைமையும் அதனால் பிறர்க்குச் செய்கின்ற அறம் உடைமையும் இருந்தால் இல்லற வாழ்வு வாழ்வதற்கான பண்பும் வாழ்ந்ததற்கான பயனும் அதுவேயாகும்.

இம்மூன்று பாடல்களாலும் இல்வாழ்வான் அறம் செய்யும் நிலை கூறப்பட்டது. அன்பும் அறனும், பண்பும் பயனும் - எண்ணும்மை

**6. அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றில்**
**போஒய்ப் பெறுவது எவன்?**

அறத்தாற்றின் - அறத்தின் வழியே ; இல்வாழ்க்கை - இல்லற வாழ்க்கையை ; ஆற்றின் - நடத்தினால் ; புறத்தாற்றில் - இல்வாழ்க்கை தவிரப் புறவழிகளில் ; போஒய் - சென்று ; பெறுவது - பெறத்தக்க பயன் (சிறப்பு) ; எவன் - என்ன?

அறத்தின் வழியே இல்லற வாழ்க்கையை நடத்தினால் பெறும்பயனைவிடச் சிறந்தது இல்லை. அதை விடுத்து இல்லற வாழ்க்கை தவிரப் புறவழிகளில் சென்று பெறத்தக்க பயனோ சிறப்போ எதுவும் இல்லை.

போஒய் - இசைநிறை அளபெடை

**7. இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்**
**முயல்வாருள் எல்லாம் தலை.**

இயல்பினான் - இல்லற வாழ்க்கைக்குரிய மேற் கூறிய இயல்புகளோடு ; இல்வாழ்க்கை வாழ்பவன் - என்பவன் - இல்வாழ்க்கையை வாழ்பவன் எனப்படுபவன் ; முயல்வாருள் எல்லாம் - புலன் உணர்வுகளை விட்டுவிட முயல்பவர்கள் எல்லோருள்ளும் ; தலை - முதன்மையானவன்.

இல்லற வாழ்க்கைக் குரிய அன்பு அறம் ஆகிய இயல்புகளோடு இல்வாழ்க்கையை வாழ்பவன் எனப்படுபவன் புலன் உணர்வுகளை விட முயற்சி செய்பவர்கள் எல்லோருள்ளும் முதன்மையானவன் ஆவான்.

இயல்பினான் - உருபு மயக்கம்.

**8. ஆற்றின் ஒழுக்கி அறன் இழுக்கா இல்வாழ்க்கை**
**நோற்பாரின் நோன்மை உடைத்து.**

ஆற்றின் ஒழுக்கி - நல்ல அறம் செய்கின்ற முறையால் பிறரையும் தம்வழியில் நடக்கச் செய்து ; அறன் இழுக்கா - அறத்தினிலிருந்து தவறாத ; இல்வாழ்க்கை - இல்லற வாழ்க்கை ; நோற்பாரின் - தவம் செய்கின்றவர்களின் ; நோன்மை - தவத்தின் பொறுமை ; உடைத்து - உடையதாகும்.

நல்ல அறம் செய்கின்ற முறையால் பிறரையும் தம்வழியில் நடக்கச் செய்து, அறத்திலிருந்து தவறாத நெறியாளர்களின் இல்லற வாழக்கை தவம் செய்கின்றவர்களின் தவப் பொறுமையை விடப் பெருமை உடையதாகும்.

ஒழுக்கி - வினை எச்சம் ; இழுக்கா - ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் ; நோற்பாரின் - இன் ஒப்புப் பொருளில் வந்தது.

**9. அறன்எனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்**
**பிறன்பழிப்பது இல்லாயின் நன்று.**

அறன் எனப் பட்டதே - அறம் என்று சொல்லப்படுவதே ; இல்வாழ்க்கை - இல்வாழ்க்கைதான் ; அஃதும் - அந்த இல்லற வாழ்க்கையும் ; பிறன்பழிப்பது - பிறரால் பழிக்கப்படும்நிலை ; இல்லாயின் - இல்லை என்றால் ; நன்று - அந்த இல்வாழ்க்கையும் நல்லதாகும்.

அறம் என்று சொல்லப்படுவதே இல்லற வாழ்க்கை தான் ; அந்த வாழ்க்கையும் பிறரால் பழிக்கப்படும் நிலை இல்லை என்றால் அதுவே நல்லறமாகும்.

6,7,8,9 ஆகிய குறள்களில் இல்லற நிலையே பயனுடையது என்பது கூறப்பட்டது.; எனப்பட்டதே - பிரிநிலை ஏகாரம் ; நன்று - குறிப்பு வினைமுற்று.

**10. வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்**
**தெய்வத்துள் வைக்கப் படும்.**

வையத்துள் - உலகத்தில் ; வாழ்வாங்கு வாழ்பவன் - இல்லறத்

தோடு கூடிவாழும் இயல்பான அறநெறி முறையால் வாழ்பவன் : வானுறையும் - வானுலகில் தங்கியுள்ள ; தெய்வத்துள் - தேவர்களுக்குள்: வைக்கப்படும் - ஒருவனாக வைத்து எண்ணப்படுவான்.

இந்த உலகத்தில் இல்லறத் தோடு கூடிவாழும் இயல்பான நெறிமுறையால் வாழ்பவன் வானுலகில் தங்கியுள்ள தேவர்களுக்குள் ஒருவனாக வைத்து மதித்து எண்ணப்படுவான். இக்குறளில் மறுமைப்பயன் கூறப் பெற்றது.

## வாழ்க்கைத் துணைநலம்

இல்வாழ்வானின் வாழ்க்கைத் துணையான இல்லாளின் நன்மையும் பெருமையும்

**1. மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்**
**வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.**

மனைத்தகக் - இல்லறத்திற்கு ஏற்ற ; மாண்புடையள் ஆகி - பெருமையுடையவள் ஆகி (துறந்தார், துவ்வாதவர் மாட்டு அருளுடைமை) தற்கொண்டான் - தன்னைத் துணையாகக் கொண்டவனின் ; வளத்தக்காள் - பொருள்வளத்திற்கு ஏற்ற வாழ்க்கையை நடத்தும் தகுதியுடையவளாய் ; வாழக்கைத் துணை - இல்லறத்தானின் வாழ்க்கைக்குத் துணையாவாள்.

இல்லத்திற்கு ஏற்ற பெருமையுடையவளாய் (துறந்தார், வறியோர் முதலானவரிடம் இரக்கம் உடைமை) தன்னைத் துணையாகக் கொண்டவனின் பொருள் வளத்திற்கு ஏற்ற வாழ்க்கை நடத்தும் தகுதியுடையவளாய் இருக்கும் பெண்தான் இல்லறத்தானின் வாழ்க்கைக்குத் தக்க துணையாவாள்.

மாண்பும், தகுதியறிதலும் பெண்ணுக்குச் சிறப்பாகும். தற்கொண்டான் - இரண்டாம் வேற்றுமைத் தொகை; வாழ்க்கைத் துணை - நான்காம் வேற்றுமைத் தொகை

**2. மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை**
**எனைமாட்சித் தாயினும் இல்.**

மனைமாட்சி - இல்லறத்திற் கேற்ற மேற்சொன்ன மாண்புகள். இல்லாள்கண் - இல்லறத்தை ஆள்பவளாகிய பெண்ணிடத்தில், இல்லாயின் - இல்லை என்றால் ; வாழ்க்கை - ஒருவன் வாழும் வாழ்க்கை ; எனைமாட்சித் தாயினும் - எத்தனை சிறப்புப் பெற்றிருந்தாலும் ; இல் - பயனில்லை.

இல்லறத்திற்கு ஏற்ற மேற்சொன்ன மாண்புகள் இல்லறத்தை ஆள்பவளாகிய பெண்ணிடத்தில் இல்லை என்றால் ஒருவன் வாழ்க்கை எத்துணை சிறப்புப் பெற்றிருந்தாலும் பயனில்லை.
( இல் - இல்லறம் ; இல்லாயின் - இல்லை எனில்; இல் - பயனில்லை).

3. **இல்லதுஎன் இல்லவள் மாண்பானால் உள்ளதுஎன்**
**இல்லவள் மாணாக் கடை.**

இல்லதுஎன் - இல்லாதது எது? ; இல்லவள் - இல்லறத் துணையானவள் ; மாண்பானால் - இல்லறத்திற்குரிய சிறப்புடையவளானால் ; உள்ளதுஎன் - உள்ளது எது? ; இல்லவள் - மனையாள் ; மாணாக் கடை - இல்லறச் சிறப்பு இல்லா விட்டால் ;

இல்லறத் துணையானவள் இல்லறத்திற்குரிய சிறப்புடையவளானால் ஒருவன் வாழ்க்கையில் இல்லாதது எதுவும் இல்லை ; அவள் சிறப்பில்லாதவளானால் அவனுடைய வாழ்க்கையில் என்ன உள்ளது? ஒன்றுமில்லையாம்.

2,3 ஆம் குறள்களில் இல்லறத்தில் பெண்ணின் சிறப்பே வேண்டுவதாகும் எனக் கூறுகிறார்.

இல்லது, உள்ளது - குறிப்பு வினை முற்றுக்கள்; மாணா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

4. **பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்பென்னும்**
**திண்மை உண்டாகப் பெறின்.**

பெண்ணின் - பெண்ணைவிட ; பெருந்தக்க - பெருமை நிறைந்தவை ; யாஉள - எவை உள்ளன? கற்பென்னும் திண்மை - உறுதியுடன் எதற்கும் கலங்காத மனவலிமை ; உண்டாகப் பெறின் - அவளிடத்தில் உண்டானால்.

இல்லறம் நடத்தும் சிறப்புகளில் உறுதியுடன் எதற்கும் கலங்காத

மன வலிமை ஒரு பெண்ணிடத்தில் உண்டானால் அந்தப் பெண்ணை விட இல்லறத்தில் ஒருவன் பெறத்தக்க பெருமை நிறைந்த பொருள்கள் எவை உள்ளன ?

( கற்பு - மன வலிமை ) பெண்ணின் மன வலிமை கூறப்பட்டது.

பெண்ணின் - ஐந்தாம் வேற்றுமை உருபு 'இன்' ஒப்புப் பொருளில் வந்தது.

இல்லறச் செயல்களில் அருளுடைமையாலும் ஒப்புரவினாலும் வறுமை வந்தாலும், கணவனின் வருவாய் குறைவானாலும் மனங்கலங்காமல் இல்லறத்தைச் சிறப்பாய் நடத்த வேண்டும் என்ற மனவலிமையே கற்பாகும். (கற்பெனப்படுவது சொற்றிறம் பாமை) தான் சொன்ன சொல்லிருந்து மாறாதிருத்தல் எனவும் கொள்ளலாம்.

5. **தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்**
**பெய்எனப் பெய்யும் மழை.**

தெய்வம் தொழாஅள் - பிற தெய்வங்களை வணங்காதவளாய்; கொழுநன் - தன்னைத் துணையாகக் கொண்ட கொழுநனை; தொழுதெழுவாள் வணங்கித் துயில் எழுபவள் ; பெய் என - பெய் என்று சொல்ல; பெய்யும் மழை - மழை பெய்யும்.

வணங்குவதற்குரியவையாக அமைந்துள்ள தெய்வங்களை வணங்காமல் காலையில் துயில் எழும் போது தன்னைக் கொண்ட கணவனைத் தொழுது எழுகின்ற பெண் மழையை வேண்டினால் மழைபெய்யும்.

மனவலிமை உடைய கற்புடையாளின் ஆற்றல் கூறப்பட்டது. தொழா அள் - இசை நிறை அளபெடை; கொழுநன் தொழுது - இரண்டாம் வேற்றுமைத் தொகை; தொழுது - வினை எச்சம்.

6. **தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற**
**சொற்காத்துச் சோர்விலாள் பெண்.**

தற்காத்து - இல்லறம் பேணுவதில் தன் கடமையினின்று வழுவாமல் தன்னைக் காத்து ; தற்கொண்டான் பேணி - தன்னைத் துணையாகக் கொண்ட கணவனையும் பாது காத்து ; தகைசான்ற சொற்காத்து - இவற்றால் தன்னையும் கணவனையும் பிறர் புகழ்ந்த சொல்லையும் காத்து ; சோர்விலாள் - இல்லறச் செயல்களில்

சோர்வில்லாதவளாய் இருப்பவளே. பெண் - இல்லறப் பெண்ணாவாள்.

தன்கடமையிலிருந்து வழுவாமல் தன்னைக் காத்தும் தன்னைத் துணையாகக் கொண்ட கணவனைப் பாதுகாத்தும் இவற்றால் தன்னையும் தன்கணவனையும் பிறர் புகழ்ந்து சொல்லிய சொல்லைக் காத்தும் இல்லறச் செயல்களில் சோர்வில்லாமல் (தயங்காமல்) இருப்பவளே இல்லறப் பெண்ணாவாள்.
இதனால் பெண்ணின் சிறப்புக் கூறப்பட்டது.

தற்காத்து, தற்கொண்டான், சொற்காத்து - இரண்டாம் வேற்றுமைத் தொகைகள்; சோர்வு இலாள் - இல்லாள் என்பதன் இடைக்குறை

**7. சிறைகாக்கும் காப்புஎவன் செய்யும் மகளிர்**
**நிறைகாக்கும் காப்பே தலை.**

சிறைகாக்கும் - வாயிலாலும் மதிலாலும் தடுக்கும் ; காப்பு - இல்லற நிகழ்வுகளைக் காத்தல் ; எவன் செய்யும் - என்ன பயனைத்தரும்? மகளிர் - இல்லற வாழ்வின் துணையான பெண்கள் ; நிறைகாக்கும் - தம் மன வலிமையால் இல்லற நிகழ்வுகளைக் காக்கும்; காப்பே தலை - காவலே முதன்மையானது.

வாயிலாலும் மதிலாலும் இல்லற நிகழ்வுகள் வெளிப்படாமல் காப்பது பயன் தராது. இல்லறத்தின் துணையான மகளிர் தம் மன வலிமையால் இல்ல நிகழ்வுகள் வெளியில் செல்லா வண்ணம் காத்தலே முதன்மையானது. பெண் இல்லறத்தாரைக் காத்தலின் சிறப்புக் கூறப்பட்டது.

சிறை காக்கும், நிறை காக்கும் - மூன்றாம் வேற்றுமைத் தொகை; காப்பே - பிரிநிலை ஏகாரம்.

**8. பெற்றான் பெறின்பெறுவர் பெண்டிர் பெரும்சிறப்புப்**
**புத்தேளிர் வாழும் உலகு.**

பெண்டிர் - இல்லறத் துணையாகும் பெண்கள் ; பெற்றான்பெறின் இல்லறத்தை அறவழி நடத்தும் கணவனைப் பெற்றவராயின்

பெறுவர் - அவர்கள் அடைவர் ; புத்தேளிர் வாழும் உலகு - தேவர்கள் வாழும் உலகின்கண் ; பெரும் சிறப்பு - பெருமை நிறைந்த சிறப்பு.

இல்லறத் துணையாகும் பெண்கள் இல்லறத்தை அறவழியில் நடத்தும் கணவனைப் பெற்றவராயின் தேவர்கள் வாழும் உலகின்கண் பெருமை நிறைந்த சிறப்பினைப் பெறுவார்கள். சிறந்த துணையாகும் பெண்டிர் போற்றத்தக்கவர்கள் என்பது கருத்து.

பெற்றான் - வினையால் அணையும் பெயர்; இரண்டாம் வேற்றுமை உருபு தொக்கது.

**9. புகழ்புரிந்த இல்இலோர்க்கு இல்லை இகழ்வார்முன்**
**ஏறுபோல் பீடு நடை**

புகழ்புரிந்த - புகழுக்கான செயல்கள் செய்ய விரும்பும்; இல் - துணையாகிய இல்லாளை ; இலோர்க்கு - இல்லாதவர்க்கு ; இகழ்வார்முன் - தம்மை இகழும் பகைவர்க்கு முன் ஏறுபோல் - சிங்க ஏறுபோல ; பீடு நடை இல்லை - பெருமிதம் நிறைந்த நடை இல்லை.

புகழுக்கான செயல்களை இல்லறத்தில் செய்ய விரும்பும் துணையாகிய இல்லாளை இல்லாதவர்க்கு, தம்மை இகழ்ந்து பேசும் பகைவர்முன்னே ஏறுபோன்ற பெருமிதம் நிறைந்த நடை இல்லையாகும். எனவே ஆடவன் பெருமிதத்திற்கு இல்லாளின் செயலே செளின் துணையாகும்.

புகழ்ச்செயல் ஏற்படாதவழி நேரும் குற்றம் கூறப்பட்டது.
இல் - ஆகுபெயர் ; இல்இலோர்க்கு - இல்இல்லோர்க்கு என்பதன் இடைக்குறை ; நடை - தொழிற் பெயர்.

**10. மங்கலம் என்ப மனைமாட்சி மற்று அதன்**
**நன்கலம் நன்மக்கட் பேறு**

மங்கலம் என்ப - நன்மை விளைவிப்பது என்று சொல்லுவர் ; மனைமாட்சி - இல்லறத் துணையாகும் பெண்ணின் மாண்புகள் ; அதன் - அத்தகு மங்கலத்திற்கு ; நன்கலம் - நல்ல அணிகலன் ; நன்மக்கட் பேறு - நல்ல குழந்தைகளைப் பெறுவது.

இல்லறத் துணையாகும் பெண்ணின் மாண்புகள்தாம் இல்லத்தில் நன்மை விளைவிப்பன என்று சொல்லுவர் ; அந்த மங்கலத்திற்கும் நல்ல அணிகலனைப் போன்றது நல்ல குழந்தைகளைப் பெறுவதே.

வாழ்க்கைத் துணைக்கு நல்ல அணிகலன் கூறப்பட்டது.

மனை - இல்லறத் துணை ; மற்று - வினை மாற்று; அசைநிலை நன்கலம் - பண்புத் தொகை ; நன்மக்கள் - பண்புத் தொகை. பேறு - பெறு என்பதன் நீட்டல் விகாரம்.



(தொடரும்....)

## மடாலய நிகழ்வுகள்

10.08.2016 அன்று கணினிஇயல் துறை மன்றத் தொடக்க விழா நடைபெற்றது. அழகப்பா பல்கலைக் கழகத்தின் கணினி இயல்துறைப் பேராசிரியர் கே. சாந்தி கலந்து கொண்டு சிறப்பித்தார்.

23.08.2016 அன்று நடைபெற்ற தமிழ்மன்றத் தொடக்க விழாவில் நற்கதை நம்பி டாக்டர். அய்க்கண் அவர்கள் கலந்து கொண்டு சிறப்பித்தார்.

24.08.2016 அன்று நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி சார்பில் கணினி அறிவியல் மற்றும் தொழில் நுட்பத்தில் நவீன முறைகள் என்ற தலைப்பில் உள்நாட்டுக் கருத்தரங்கு நடைபெற்றது. கல்லூரி முதல்வர் டாக்டர் பா. செல்லப்பா தலைமையில் நடந்த விழாவில் கணினி இயல் துறைத் தலைவர் டாக்டர் கே. கலா வரவேற்புரை ஆற்றினார். நாகர்கோவில் எஸ்.டி.டி இந்துக் கல்லூரிப் பேராசிரியர் S.ஆறுமுகப் பெருமாள், பெங்களுர் அரசுக் கல்லூரிப் பேராசிரியர் மீனாட்சி, தெரசா மகளிர் பல்கலைக் கழகப் பேராசிரியர் டாக்டர் கவிதா ஆகியோர் கருத்தரங்கச் சிறப்புரை வழங்கினார்கள்.

26.08.2016 அன்று கணிதத்துறை சார்பாக இராமானுஜர் கணிதவியல் மன்றத் தொடக்க விழா நடைபெற்றது. அழகப்பா அரசுகலைக் கல்லூரியின் மேனாள் கணிதத் துறைத் தலைவர் டாக்டர். கு. சுப்பிரமணியன் பங்கேற்றுச் சொற்பொழிவாற்றினார்.

27.08.2016 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் டாக்டர் கரு. முத்தையா அவர்களின் திருஞான சம்பந்தர் பற்றிய இரண்டாம் அமர்வுச் சொற்பொழிவு நிகழ்ந்தது.

27.08.2016 முதல் 31.08.2016 வரை நாச்சியப்ப சுவாமிகளின் 5ஆம் ஆண்டு குருபூசை விழாவை முன்னிட்டு,பள்ளிகள் கல்லூரிகளுக்கு இடையே பல்வேறு போட்டிகள் நடைபெற்றன.

27.08.2016 அன்று பள்ளி மாணவர்களுக்கான மினி மராத்தான் போட்டி நடைபெற்றது.

31.08.2016 அன்று வணிகவியல் துறை மன்றத் தொடக்க விழா நடைபெற்றது. அழகப்பா பல்கலைக் கழக மேலாண்மைத் துறை உதவிப் பேராசிரியர் டாக்டர் G. இளங்குமரன் சிறப்புரை ஆற்றினார்.

01.09.2016 அன்று ஆங்கிலத்துறை சார்பில் இலக்கிய மன்றத் தொடக்க விழா நடைபெற்றது. டாக்டர் S. நிலவழகன் கலந்துகொண்டு சிறப்புரையாற்றினார்.

03.09.2016 அன்று ஆன்று ஆசிரியர் தினம் கொண்டாடப் பெற்றது. கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர். சே.குமரப்பன் தலைமையில் நடந்த விழாவில் அனைத்துக் கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள், பேராசிரியர்கள், ஆசிரியர்கள், அலுவலர்கள் திரளாகக் கலந்து கொண்டு பல்வேறு போட்டிகளில் பங்கேற்றனர்.தவத்திரு குன்றக்குடி அடிகளார் மகளிர் கல்வியியல் கல்லூரிச் செயலர் டாக்டர். நா. மோகன் ராஜா பரிசுகளை வழங்கி வாழ்த்துரை கூறினார். போட்டிகளைக் கணினிஇயல் துறைப் பேராசிரியர்களும் மாணவர்களும் நடத்தினர்.

10.09.2016 அன்று கலை அறிவியல் கல்லூரியில் தமிழ் மன்றம் சார்பில் பாரதி விழா நடைபெற்றது. காப்பியக் கவிஞர் நா. மீனவன் கலந்துகொண்டு சிறப்புரை ஆற்றினார்.

14.09.2016 அன்று வெங்கடாசலம் ஐயா குருபூசையும் 15.09.2016 அன்று மதுரை குட்டையா சுவாமிகள் குருபூசையும் நடைபெற்றன.

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**